கமண்டலத்தின்பெயர்—குண்டிகை, கரகம், காண்டகம். ௩.
கெண்டியின்பெயர்—கடிப்பம், கோடிகம். ௨.
வெண்குடையின்பெயர்—குளிர், தொங்கல், கவிப்பு, பிச்சம், கவி
கை, ஆதபத்திரம், சத்தி, சத்திரம். ௮.

பேராலவட்டத்தின்பெயர்—ஆலவட்டம், கால்செய்வட்டம், உக்
கம், தாலவிருந்தம். ௪.
சிற்றாலவட்டத்தின்பெயர்—பீலி, வீசனம், சாந்தாற்றி, விசிறி. ௪.

இடக்கையின்பெயர்—ஆமந்திரிகை. ௧.
முழவின்பெயர்—குளிர். ௧.
படகத்தின்பெயர்—பணவம், திண்டி, ஆனகம். ௩.
கடிப்பின்பெயர்—குணில். ௧.
ஒருகட்பறையின்பெயர்—மொந்தை. ௧.
பேரிகையின்பெயர்—நந்தி. ௧. சிறுபறையின்பெயர்—ஆகுளி. ௧.

திமிலையின்பெயர்—சல்லரி. ௧.
நிசாளத்தின்பெயர்—தண்ணுமை. ௧.
பன்றிப்பறையின்பெயர்—குடப்பறை. ௧.
ஒருகட்பகுவாய்ப்பறையின்பெயர்—பதலை. ௧.
கரடிப்பறையின்பெயர்—தட்டை. ௧.

குறிஞ்சிப்பறையின்பெயர்—தொண்டகம், முருகியம், துடி. ௩.
பாலைப்பறையின்பெயர்—துடி. ௧.
முல்லைப்பறையின்பெயர்—பம்பை, ஏறங்கோட்பறை. ௨.
மருதப்பறையின்பெயர்—கிணை. ௧.

நெய்தற்பறையின்பெயர்—சாபறை. ௧.
உவகைப்பறையின்பெயர்—தூரியம். ௧.
தண்ணுமையின்பெயர்—உடுக்கை. ௧.
இடைசுருங்குபறையின்பெயா—துடி. ௧.
மார்ச்சனையின்பெயர்—மண். ௧.

வாச்சியப்பொதுவின்பெயர்—தூரியம், முழவு, திண்டி, துந்துபி,
முருடு, தக்கை, பேரி, தகுணிதம், பீலி, தடாரி, பம்பை, முரசு,
தண்ணம், கோடணை, இயம், சகண்டை. ௧௬.

தேரின்பெயர்—இரதம், கொடிஞ்சி, இயந்திரம், குயவு, வையம்,
அரி, கூவிரம், சயந்தனம். ௮.
தேருருளின்பெயர்—பரிதி, சில்லி, ஆழி, கால், நேமி, உருள், உரு
ளி, உந்தி. ௮.

 ஏழாவது செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி.

ஆரெனுநாமந்தேரினகத்தினுட்செறிகதிர்ப்பேர்
தேர்நடுப்பேரேதட்டுச்செப்பியநாப்பணும்பேர்
சார்பலகைப்பாப்பாராஞ்சார்ந்தகூவிரங்கொடிஞ்சி
தேர்மொட்டுக்கூம்புதேரின்மரச்சுற்றுக்கிடுகுதானே. (௪௫)

பாண்டில்கஞ்சிகைவையம்போர்ப்பரிகள்பூண்டேர்க்குஊர்தி
தாண்டியசகடுவையஞ்சாகாடேயொழுகைசாடு
தூண்டியவுருளினோடுசகடமுஞ்சொல்லும்பண்டி
ஈண்டியபண்டியுள்ளினிருடபுகந்திருசுமமே. (௪௬)

விஞ்சியமுத்தினூர்திவெண்முத்தின்சிவிகைதானே
தஞ்சமாஞ்சிவிகைவையந்தண்டிகையணிகய்யானம்
கஞ்சிகைமணிக்காற்பள்ளியென்பனகதிர்வேன்மன்னர்
எஞ்சலில்சிறப்பினேறுமிராசவாகனமதாமே. (௪௭)

அலமுழுபடைதொடுப்போடாலயேபடைவாணுஞ்சில்
கலனையேகலப்பையேழ்பேர்கந்தெழுமதலைதபயம்
நிலைபெறுதறிகாழுனுநெடுந்தூணும்வெளில்யானைத்தூண்
புலையில்வேள்விததூண்யூபம்போதிகைகுறுந்தறிப்பேர். (௪௮)

கதவின்பேரரரிவாரிகாப்பொடுகவாடந்தோட்டி
புதவுமாங்காழுஞ்சீப்பும்போற்றியகடிகையுந்தாழ்
மதமுறும்யானைதன்னைவணக்குமங்குசமேதோட்டி
விதமுறுகோணமென்றும்விளம்புவரளர்ந்தநூலோர். (௪௯)

பட்டடையடைகுறட்டின்பாலதாழுலையாணிக்கோல்
சுட்டுக்கோலென்றுநாமஞ்சொல்லுபநல்லநூலோர்
முட்டியபெருங்குறட்டைமுருடெனமொழிபவோங்கிக்
கொட்டுஞ்சம்மட்டிகூடங்கோள்கொழுவென்றுகூறும். (௫0)

பாதையேவங்கந்தோணிபாரதிபஃறியம்பி
போதமேமதலையானம்புணைசதாநௌவேநாவாய்
பேதமில்பாறுதொள்ளைபேணுறுமரக்கலப்பேர்
வாதைதீர்மரக்கலப்பாயிதையெனவழங்கலாமே. (௫௧)

பகடம்பிபஃறியோடம்பகர்பெயர்திமிலேதோணி
பகடுபட்டிகையேயம்பிபடுவையேபுணையேதெப்பம்
மிகைபடுமிதவையும்பேர்விசியின்பேரியென்றாகும்
பகர்தருபாரிமஞ்சம்பரியங்கப்பாண்டில்கட்டில். (௫௨)

தேரினகத்திற்செறிகதிரின்பெயர்—ஆர். க.
தேர்நடுவின்பெயர்—தட்டு, நாப்பண். உ.
தேர்ப்பலகைப்பாவின்பெயர்—பார். க.
தேர்க்கொடிஞ்சியின்பெயர்—கூவிரம். க.
தேர்மொட்டின்பெயர்—கூம்பு. க.
தேர்மரச்சுற்றின்பெயர்—இடுகு. க.
பரிகள்பூண்டேர்க்குறூர்தியின்பெயர்-பாண்டில்,கஞ்சிகை,வையம். ங.
பண்டியின்பெயர்—சகடு, வையம், சாகாடு, ஒழுகை, சாடு, உருள், சகடம். எ.
பண்டியுள்ளிரும்பின்பெயர்—கந்து, இருசு. உ.
முத்துச்சிவிகையின்பெயர்—முத்தினூர்தி. க.
சிவிகையின்பெயர்—வையம், தண்டிகை, அணிகம், யானம். ச.
இராசவாகனத்தின்பெயர்—கஞ்சிகை, மணிக்காற்பள்ளி. உ.
கலப்பையின்பெயர்—அலம், உழுபடை, தொடுப்பு, ஆலம், படைவாள், நாஞ்சில, கலனை. எ.
தூணின்பெயர்—கந்து, மதலை, தம்பம், தறி, கால், தாறு. சா.
யானைத்தூணின்பெயர்—வெளில். க.
வேள்வித்தூணின்பெயர்—யூபம். க.
குறுந்தறியின்பெயர்—போதிகை. க.
கதவின்பெயர்—அரி, வாரி, காப்பு*கவாடம், தோட்டி, புதவு. சா.
தாழின்பெயர்—காழ், சீப்பு, கடிகை. ங.
யானைதோட்டியின்பெயர்—அங்குசம, கோணம். உ.
அடைகுறட்டின்பெயர்—பட்டடை. க.
உலையாணிக்கோலின்பெயர்—சுட்டுக்கோல். க.
பெருங்குறட்டின்பெயர்—முருடு. க.
சம்மட்டியின்பெயர்—கூடம். க. கொழுவின்பெயர்—கோள். க.
மரக்கலத்தின்பெயர்—பாதை, வங்கம், தோணி, பாரதி, பஃறி, அம்பி, போதம், மதலை, யானம், புணை, சதா, நௌ, நாவாய், பாறு, தொள்ளை. கரு.
மரக்கலப்பாயின்பெயர்—இதை. க.
ஓடத்தின்பெயர்—பகடு, அம்பி, பஃறி. ங.
தோணியின்பெயர்—திமில். க.
தெப்பத்தின்பெயர்-பகடு,பட்டிகை,அம்பி,படுவை,புணை,மிதவை. சா
விசியின்பெயர்—அரி. க.
கட்டிலின்பெயர்—பாரி, மஞ்சம், பரியங்கம், பாண்டில். ச.

* கபாடமெனினுமொக்கும்.

 ஏழாவது செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி

விட்டார்தவத்தோர்பீடம் விளங்கும்பீழ் கையுமட்டோ
இட்டசிங்காதனம் பத்திராசனமென்பதாமே
கிட்டை யேகறையேமற்றுச்செப்பியவுலூகலந்தான்
முட்டியவுரலின்முப்பேர்முசலமேதடியுலக்கை. (௫௩)

உறிசிதர்சிக்கந்தூக்கோடோதியசிமிலிநாற்பேர்
நிறுவியவுஞ்சலூசனீண்டவிண்டாண்டுபெப்பேர்
இறைவையேசேணியேணிமால்புகண்ணேணியின்பேர்
குறைவிலம்பணந்தூம்போடுகுளகங்கச்சமூமரக்கால். (௫௪)

விரவியகுஞ்சநாழிவிரித்தகொத்தளிப்பாயாரை
பெருகியசாம்பைபுற்பாய்பிரப்பம்பாய்சாதிப்பாயாம்
சருமந்தோற்பாய்தடுக்கேதவிசாகுநகுழாயேதண்டாம்
பெருகுகோடிகபுந்தட்டேபெட்டியேமுழிவாயாம். (௫௫)

சட்டேபேகிடுகாமென்பசாற்றியகப்பந்தம்பம்
விட்டொளி கௌசிகங்கண்மதகிகைவிளக்குத்தண்டம்
தட்டொடுசின்னஞ்சேட்டைதருமுறமுற்றிலும்போ
பட்டிலேயிறைவையெனபவட்டிகைகூடையாமே. (௫௬)

சுளகின்பேர்குர்ப்பமென்பதுடைப்பஞ்சோதனிமாறும்போ
வளமுறுமுழிமுழையகப்பையாமத்துமத்தம்
மெளிறயிர்கடைதறிப்பேர்மெச்சும்பாவாற்றிகுச்சாம்
அளவில்காருகர்நாடாநூனுழியேயாகுமென்ப. (௫௭)

கிழார்பூட்டைகாம்பியம்பிகிளந்தகாராம்பியாகும்
பிழாரிடாரிறைகூடைப்பேர்பெருந்தூம்பம்பணநீர்ப்பத்தர்
துழாவியகாசுவல்லுச்சூதின்பேர்கழங்குமாகும்
தழாதுருள்கவற்றிற்குரியமாயமாஞ்சாரிநாயாம். (௫௮)

கடிகையேதுணியேதுண்டங்காட்டியவகிர்வார்வள்ளாம்
சுடுவொடுசுமடுதாங்குஞ்சுமையடைசும்மாட்டின்பேர்
வடிவுறுவலேயேசாலமற்றதிற்கயிறுமாமே
தொடருறுநூலேதந்துசூத்திரம்பனுவலும்பேர். (௫௯)

தவத்தோர்பீடத்தின்பெயர்—விட்டரம், பிடிகை. உ.
சிங்காதனத்தின்பெயர்—பத்திராசனம். க.
உரலின்பெயர்—திட்டை, கறை, உலூகலம். ங.
உலக்கையின்பெயர்—முசலம், தடி. உ.

உறியின்பெயர்—சிதர், சிக்கம், தூக்கு, சிமிலி. ச.
ஊஞ்சலின்பெயர்—ஊசல், விண்டாண்டு. உ.
ஏணியின்பெயர்—இறைவை, சேணி. உ.
கண்ணேணியின்பெயர்—மால்பு. க.
மரக்காலின்பெயர்—அம்பணம், தூம்பு, குளகம், கச்சம். ச.

நாழியின்பெயர்—குஞ்சம். க.
கொத்தளிப்பாயின்பெயர்—ஆரை. க. புற்பாயின்பெயர் சாட்டை. க.
பிரப்பம்பாயின்பெயர்—சாதிப்பாய். க.
தோற்பாயின்பெயர்—சருமம். க. தடுக்கின்பெயர்—தவிசு. க.
குழாயின்பெயர்—நண்டு. க. பூந்தட்டின்பெயர்—கோடிகம். க.
பூப்பெட்டியின்பெயர்—மூழிவாய். க.

சட்டத்தின்பெயர்—ஒடுகு. க.
விளக்குத்தண்டின்பெயர்—கம்பம், தம்பம், கௌசிகம், பத்திகை. ச.
முறத்தின்பெயர்—தட்டு, சின்னம், சேட்டை, முற்றில். ச.
புட்டிலின்பெயர்—இறைவை. க. கூடையின்பெயர்-வட்டிகை. க.

சுளகின்பெயர்—சூர்ப்பம். க.
துடைப்பத்தின்பெயர்—சோதனி, மாறு. உ.
அகப்பையின்பெயர்—மூழி, மூழை. உ.
மத்தின்பெயர்—மந்தம். க. தயிர்கடைதறியின்பெயர்-வெளில். க.
பாவாற்றியின்பெயர்—குச்சு. க. நூனாழியின்பெயர்—நாடா. க.

காராம்பியின்பெயர்—கிழார், பூட்டை, காம்பி, அம்பி. ச.
இறைகூடையின்பெயர்—பிழார், இடார். உ.
நீர்ப்பத்தரின்பெயர்—தூம்பு, அம்பணம். உ.
சூதின்பெயர்—காசு, வல்லு, கழங்கு. ங.
கவற்றிற்றாயத்தின்பெயர்—ஆயம். க.—சாரியின்பெயர்—நாய். க.

துண்டத்தின்பெயர்—கடிகை, துணி. உ.
வகிரின்பெயர்—வார், வள். உ.
சும்மாட்டின்பெயர்—சுடுவு, சுமடு, சுமையடை. ங.
வலையின்பெயர்—சாலம். க. வலைக்கயிற்றின்பெயர்—சாலம். க.
நூலின்பெயர்—தந்து, சூத்திரம், பனுவல். ங.

பழுதையேதாமங்கச்சைபாசமேயிரச்சேநாணே
வழுவிலாத்தாம்பேயக்கம்வடம்புரிகயிறதாமே
தழுவுதாமணியேதாம்புபசுக்கட்டுங்கயிறுதானும்
சுழல்கறங்கேகாற்றாடிசொல்லியகதலியும்பேர். (௬௦)

பந்துமட்டத்துருத்திபகர்பெருந்துருத்திநீரைச்
சிந்தியசிவிறியாகுஞ்சீப்புக்கங்கதமேசிக்கம்
பைந்தொடிமகளிராடப்படுங்களமோரையென்ப
தொந்தமாம்பாதங்காப்புக்கழறொடுதோல்செருப்பாம். (௬௧)

இட்டபாதுகையேபாவன்மிதியடியிதன்மேலிட்ட
கொட்டையாங்குடைபற்சீவுங்கோன்மெல்கோல்வளிசந்தூண்டில்
பட்டவம்பனையம்மானைபந்துகந்துகமென்றோதும்
முட்டையேதவிட்டினும்முடையுமாநொறுங்குநொய்யே. (௬௨)

ஊதியவுலைத்துருத்தியுதியுத்திரியுமாகும்
கோதிலாச்சிவையினோடுகுருகுகொல்லுலைமூக்கின்பேர்
சோதனிசீக்குங்காடுதுராணரன்மயலேசெததை
சாதுயர்ப்பாடைவெள்ளிலசிலாவட்டஞ்சாணைக்கல்லே. (௬௩)

தடம்படுபெநலைதாழிதளஞ்சாடியகளமும்பேர்
இடங்கரேநிறையேவட்டமேற்றநீர்ச்சாலிற்றுப்பேர்
கிடந்தகொப்பரிதசும்புகடாகமாங்குடத்தினும்
குடங்கரேயிடங்கர்தாழிகுணங்கடங்கலசங்கும்பம். (௬௪)

தடாவொடுகரீரநீரைத்தருமுகைகுழிசிநான்கும்
மிடாவென்பபானையின்பேர்மேவியகுண்டத்தோடு
மிடாவுமாம்விரும்புநல்லார்வெண்டயிர்கடையுந்தாழி
விடாதமந்தினியினோடுகேர்க்கரிவிளம்பலாமே. (௬௫)

சிரகங்கர்க்கரியேகன்னல்சீகரநான்குபேரும்
கரகத்தினுமாகுங்கருதுவற்கரியுமென்ப
திருவறஞ்செய்யாரேற்குந்தீயமட்கலத்தினும்
பரவியகடிஞையையம்பாத்திரமென்றுமேற்கும். (௬௬)

இடிஞ்சிலேபாண்டிலென்பவெரிசுடர்த்தகழிநாமம்
ஒடுங்கியகுடுவைகுண்டமொளிபெறுவிசளைசட்டி
அடங்குசுத்திகையினோடுசராவமேயகலின்பேர்தான்
இடுங்கலம்பாண்டமேற்குங்கொள்கலமெவற்றிற்கும்பேர். (௬௭)

கயிற்றின்பெயர்—பழுதை, தாமம், கச்சை, பாசம், இரச்சு, நாண், தாம்பு, அக்கம், வடம், புரி. க0.
பசுக்கட்டுங்கயிற்றின்பெயர்—தாமணி, தாம்பு. உ.
காற்றூடியின்பெயர்—சுழல், கறங்கு, கதலி. ௩.

மட்டத்துருத்தியின்பெயர்—பந்து. க.
பெருந்துருத்தியின்பெயர்—கிவிரி. க.
சீப்பினபெயர்—கங்கதம், சிக்கம். உ.
மகளிராடுங்களத்தின்பெயர்—ஓரை க.
செருப்பின்பெயர்—பாதங்காப்பு, கழல், தொடுதோல். ௩.

மிதியடியின்பெயர்—பாதுகை, பாவல். உ.
மிதியடியின்மேலிட்டகொட்டையின்பெயர்—குடை. க.
பற்சீவுங்கோலின்பெயர்—மெல்கோல். க.
தூண்டிலின்பெயர்—வளிசம். க.
அம்மானையின்பெயர்—அம்மனை. க. பந்தின்பெயர்—கந்துகம். க.
தவிட்டின்பெயர்—முட்டை, முடை. உ.
நொய்யின்பெயர்—நொறுங்கு. க.

உலைத்துருத்தியின்பெயர்—உதி, அத்திரி. உ.
கொல்லுலைமூக்கின்பெயர்—சிவை, குருகு. உ.
செத்தையின்பெயர்—காடு, தூரால், நரல், மயல். ச.
பாசடையின்பெயர்—வெள்ளில். க.
சாணைக்கல்லின்பெயர்—சிலாவட்டம். க.

சாடியின்பெயர்—பதலை, தாழி, தளம், அகளம். ச.
நீர்ச்சாலின்பெயர்—இடங்கர், நிறை, வட்டம். ௩.
கொப்பரியின்பெயர்—தசும்பு, கடாகம். உ.
குடத்தின்பெயர்—குடங்கர், இடங்கர், தாழி, குணம், கடம், கலசம், கும்பம். எ.

மிடாவின்பெயர்—தடா, கரீரம், முகை, குழிசி. ச.
பானையின்பெயர்—குண்டம், மிடா. உ.
தயிர்கடைதாழியின்பெயர்—மர்த்தினி, கர்க்கரி. உ.
கரகத்தின்பெயர்—சிரகம், கர்க்கரி, கன்னல், சீகரம், வற்கரி. ரு.
ஏற்குமட்கலத்தின்பெயர்—கடிஞை, ஐயம், பாத்திரம். ௩.

தகழியின்பெயர்—இடிஞ்சில், பாண்டில். உ.
குடுவையின்பெயர்—குண்டம். க. சட்டியின்பெயர்—விசளை. க.
அகலின்பெயர்—சத்திகை, சராவம். உ.
கொள்கலம்யாவற்றிற்கும்பெயர்—இடுங்கலம், பாண்டம். உ.

கோடிகோடிகப்படாமேகோசிகங்கூறைபஞ்சி
சாடிநீவியமேசீரைசம்படங்கலைகலிங்கம்
சூடிகாடிகமேபுட்டந்தூசுகாழகமேவட்டம்
ஆடையாவரணந்தானையறுவையம்பரமாசாரம்.

மடிபரிவட்டஞ்சேலைவத்திரமுடுக்கைவாசம்
இடையுறுபுடைவையாறைந்திலக்காரமென்றும்பேர ம
இடையல்லேதகமேபட்டேயேடகமிவைதுகிற்பே
நடைபெறுநாகம்பாரிநல்லாடையிருபேராமே. ( சா )

பட்டுவர்க்கத்திறுமம்பாளிதங்கோசிகப்பேர்
பட்டுநேத்திரமாங்காம்புபடுமெதன்விகற்பநாமம்
இட்டநற்பணித்தூசின்பேரேற்றிடுந்தேவாங்கந்தான்
மட்டமாமுரிகஞ்சூழுமயிரகமயிர்ப்படாமே. (௬௦)

அத்தவாளந்தானேயுல்லாசமாம்வடகமும்பேர்
புத்தகமென்பசிதிரப்படாமாகும்போர்வைமீக்கோள்
வைத்தமுன்றானைதோகைமாதர்கொய்சகமேநீவி
உத்தரீயம்மேகாசமுத்தராசங்கமும்பேர். (௬௧)

கம்பலங்கம்பளங்கள்கம்பளிப்படாத்தின்வர்க்கம்
வம்புவார்விசிகைகச்சாம்வைத்தபட்டிகையுமாகும்
விம்புவட்டுடையுமப்பேர்விரிகஞ்சம்விடுந்தலைப்பாம
கம்பலம்படங்குவாணிவிதானமேற்கட்டியாமே. (௭௨)

கஞ்சுளியங்கிமற்றைக்காஞ்சுகமொடுகுப்பாயம்
விஞ்சுகஞ்சுகமேமெய்ப்பைமிளிரும்வாரணமேசட்டை
கஞ்சிகையவிடியோடுகொண்டமேயெழினிகண்டம்
தஞ்சமாம்படாம்படங்கள்சடிதியிலிடுதிரைப்பேர். (௭௩)

தவிசணைதளிமமெத்தையுபதானந்தலையணைப்பேர்
துவசமேசத்திவானிதோகைகேதனம்பதாகை
தவழ்விலோதனம்படங்குதரும்படாம்பெருங்கொடிப்பே
நுவலுங்கால்வீதிக்கட்டிநுடங்கியகொடிவிடங்கம். (௭௪)

புடைவையின்பெயர்—கோடி, கோடிகம், படாம், கோசிகம், கூறை, பஞ்சி, சாடி, நீவியம், சீரை, சம்படம், கலை, கலிங்கம், சூடி, காடிகம், புட்டம், தூசு, காழகம், வட்டம், ஆடை, ஆவரணம், தானை, அறுவை, அம்பரம், ஆசாரம். ௨௪.

மடி, பரிவட்டம், சேலை, வத்திரம், உடுக்கை, வாசம், இலக்காரம். ௭. (ஆக ௩௧.)

துகிலின்பெயர்—இடையல், வேதகம், பட்டு, ஏடகம். ௪.

நல்லாடையின்பெயர்—நாகம், பாரி. ௨.

பட்டுவர்க்கத்தின்பெயர்—பாளிதம், கோசிகம். ௨.

பட்டின்பெயர்—நேத்திரம். ௧.

பட்டுவிகற்பத்தின்பெயர்—காம்பு. ௧.

நற்பணித்தூசின்பெயர்—தேவாங்கம். ௧.

மயிர்ப்படாத்தின்பெயர்—மூரிகம், பயிரகம். ௨.

அத்தவாளத்தின்பெயர்—உல்லாசம், வடகம். ௨.

சித்திரப்படாத்தின்பெயர்—புத்தகம். ௧.

போர்வையின்பெயர்—மீக்கோள். ௧.

முன்றானையின்பெயர்—தோகை. ௧.

மாதர்கொய்சகத்தின்பெயர்—நீவி. ௧.

உத்தரீயத்தின்பெயர்—ஏகாசம், உத்தராசங்கம். ௨.

கம்பளிப்படாத்தின்வர்க்கப்பெயர்—கம்பலம், கம்பளம். ௨.

கச்சின்பெயர்—வம்பு, வார், விசிகை, பட்டிகை, வட்டுடை. ௫.

விடுந்தலைப்பின்பெயர்—கஞ்சம். ௧.

மேற்கட்டியின்பெயர்—கம்பலம், படங்கு, வானி, விதானம். ௪.

சட்டையின்பெயர்—கஞ்சுளி, அங்கி, காஞ்சுகம், குப்பாயம், கஞ்சுகம், மெய்ப்பை, வாரணம். ௭.

இடுதிரையின்பெயர்—கஞ்சிகை, அவிடி, காண்டம், எழினி, கண்டம், படாம், படம். ௭.

மெத்தையின்பெயர்—தவிசு, அணை, தளிமம். ௩.

தலையணையின்பெயர்—உபதானம். ௧.

பெருங்கொடியின்பெயர்—துவசம், சத்தி, வாணி, தோகை, கேதனம், பதாகை, விலோதனம், படங்கு, படாம். ௯.

வீதியிற்கட்டியகொடியின்பெயர்—விடங்கம். ௧.

கத்திகைசிறுகொடிப்பேர்கருதுகூவிரந்தேர்க்கட்டும்
சத்தியாந்துணிசீதாரஞ்சாற்றியசிதவலும்பேர்
சித்திரமோவியஞ்சீர்தீட்டும்வட்டிகையாமென்ன
வைத்தனர்பொறித்தறீட்டல்வரைதலுமெழுதலாமே. (எரு)

மற்றவற்கலையிறைஞ்சிமரவுரிசீரையும்பேர்
சுற்றலேயுடுத்தலென்பதற்றலேயிறுக்கலாகும்
குற்றமிலெழுபத்தாறுதொடர்செய்தான்குணபத்திரன்றாள்
நிற்றலும்வணங்கிநீதிநிறுத்தமண்டலவன்றானே. (எசா)

செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ_ விருத்தம் - ருஙஉ.



எட்டாவது

## பண்புபற்றியபெயர்த்தொகுதி.



காப்பு.

கடிமலர்ப்பிண்டிநீழற்காவலன்சரணம்போற்றி
வடிவினிலளவுதன்னிலவண்ணத்திற்காட்சியாகும
நெடியதோர்பொருளினமற்றுநுண்ணுணர்வாலேகாணப்
படுபொருளினகுணப்பேர்ப்பண்பதாந்தொகுதிசொலவாம. (க)

நல்லகோளகையேகொம்மைநாட்டியவலயந்தட்டுச
சொல்லியபரிதிபாண்டில்சூழ்ந்திடுகடகநேமி
சில்லிமண்டலமேயாழிதிகிரிபாலிகைவிருத்தம்
வல்லிசக்கரமீரெட்டும்வட்டமென்றிட்டநாமம். (உ)

உண்டையேகுவவுகொம்மையொடுபந்தம்புஞ்சஞ்சேடு
முண்டமேகணையேவட்டமுதைகையேதுறுமல்சோகம்
கொண்டசேர்வுடனேமாழைகுவிதலேதொழுதிநூகம்
பிண்டமூவாறுபேருந்திரட்சியாம்பிழம்புமாமே. (ங)

தொழுதியேகுவவுதோடுதொகைசமுதாயஞ்சங்கம்
தழுவியகுழுவேகோட்டிசமவாயநிகாயங்குப்பை
குழுமலேகுவாவிராசிகுவிதன்மூவைந்துங்கூட்டம்
அழகியதகட்டிஞமமரியடலைரம்மையாமே. (ச)

சிறுகொடியின்பெயர்—கத்திகை. க.
தேரிற்கட்டுங்கொடியின்பெயர்—கூவிரம். க.
துணியின்பெயர்—சீதாரம், சிதவல். உ.
சித்திரத்தின்பெயர்—ஓவியம், வட்டிகை. உ.
எழுதலின்பெயர்—பொறித்தல், தீட்டல், வரைதல். ௩.

மரவுரியின்பெயர்—வற்கலை, இறைஞ்சி, சீரை. ௩.
உடுத்தலின்பெயர்—சுற்றல். க.
இறுக்கலின்பெயர்—தற்றல். க.

# பெயர்ப்பிரிவு.

இ-ள். கடிமலர்ப் பிண்டி நீழற் காவலன் சரணம் போற்றி - மணம் பொருந்திய பூக்களையுடைய அசோகமரத்தினது நிழலின்கண்ணே வீற்றிருந்த அருகக்கடவுளுடைய திருவடிகளைத் துதித்து,—வடிவினில் - வடிவினாலும்,—அளவுதன்னில் - அளவினாலும்,—வண்ணத்தில் - வண்ணத்தினாலும்,—காட்சி ஆகும் நெடியது பொருளின் - கண்ணுக்குப் புலப்படும் பெரிதாகிய பொருளினிடத்தும்,—மற்று - அஃதன்றி,—நீள் உணர்வால் காணப்படுபொருளின் - உயர்ந்த அறிவினாற்காணப்படும் பொருளினிடத்தும் பொருந்திய,—குணப்பேர் பண்பதாந் தொகுதி செல்வாம் - பண்புகளின்பெயர்களைத் தெரிவிக்கின்ற பண்புப்பெயர்த்தொகுதியை(யாம்) கூறுவாம். எ - று. ஒ, ஏ அசை.

வட்டத்தின்பெயர்—கோளகை, கொமரம், வலயம், நட்டு, பரிதி, மண்டிலம், கடகம், நேமி, சில்லி, மண்டலம், ஆழி, திகிரி, பாலிகை, விருத்தம், வல்லை, சக்கரம். கசா.

திரட்சியின்பெயர்—உண்டை, குவவு, கொம்மை, பந்தம், புஞ்சம், சேடு, முண்டம், கணை, வட்டு,முந்தை,துறுமல், சோகம், சேர்வு, மாழை, குவிதல், தொழுதி, பூகம், பிண்டம், பிழம்பு. கக.

கூட்டத்தின்பெயர்—தொழுதி, குவவு, தோடு, தொகை, சமுதாயம், சஙகம், குழு, கோட்டி, சமவாயம், நிகாயம், குப்பை, குழுமல், குவால், இராசி, குவிதல். கரு.
தகட்டின்பெயர்—அரி, அடர், ஐம்மை. ௩.

குடிலமேகுலாவல்கோணல்கோட்டங்கூன்கோண்வளாவல்
வடிவுளதட்டுவாங்கல்வணர்பத்தும்வளைவின்பேரே
படலையேபடர்ச்சிபம்பல்பரந்திடும்வடிவினுமம்
புடைபடுகுமிழ்ப்புத்தானேபுளகமாமொக்குள்கொப்புள். (௫)

குழல்சுகிர்தூம்புநாழிகூறியபுரைவேய்வேணு
ஒழுகியசுரைநாளததோடொன்பதுமுட்டுளைப்பேர்
புழைகுழறுளையுடைத்தாம்பொருள்பிணர்சர்ச்சரைப்பேர்
செழுமயிர்கதிர்கள்போலச்சேர்ந்திடுந்தொகுதிகற்றை. (௬)

மதாணிபெருகலூக்கன்மற்றையவிதப்புச்சால
அதிகமேசிறப்பிறப்போடலைதவவமலையான்றல்
கதழ்வொடுபிறங்கல்கூரேகழுமல்பூரிப்பேயூங்கு
புதுமையேயுருத்தன்மூவேழ்மிகுதியாம்பொங்கலும்பேர். (௭)

மனனுமோடுக்கமோங்கல்வார்தல்சேணொழுக்கம்பொங்கல்
பன்னியநிமிர்தல்புங்கம்பரிபுரையுச்சந்துங்கம்
மின்னியநிவப்புகப்புமிசைமேடுபிறங்கலேந்தல்
உன்னதஞ்சிகரமூவேழுயர்ச்சியுத்துங்கமும்போ. (௮)

விரிவின்பேர்விசாலமாகும்விபுலமுமாம்பரப்புப்
பரவைபப்பூவந்தாவலபாய்தலாஞெமிர்தலும்பேர்
மருவியபயினிசங்கமற்றிவையிரண்டுங்கூடல
பருமையினுமடபீனம்பனம்பரூஉவென்றும்பேரே. (௯)

பாடுமாண்பாழிமீளிபணைபொழில்பகடுமூரி
மோடுமொறடேமேவீறுமுடலைகொண்கருமையண்ணல்
ஈடுமோதணியேமானமிருமையேகயவோடேந்தல்
பீடுவொன்குவவுசெம்மைபெருமைப்பேரிருபத்தேழே. (௧௦)

அணுநுழைமுளரிநுட்பமாய்தன்முள்ளயிர்நுணங்கு
நுணுகொடுநுவணைநூழைநொசிவீராறிவைநுண்மைப்பேர்
கணமிறைவறிதுசின்னங்கன்றுசுதன்னமொட்டே
அணைதருகிலமேதோகமற்பமிட்டிடையுமாமே. (௧௧)

அகறல்கண்ணறையேபாழியாய்வொடுபடர்தலான்றல்
அகலுளேவியலிடங்களகலமிவவெட்டுமாகும்
திகழ்செம்மையிருசுசெப்பஞ்செவ்வனேர்செவ்வையைந்தாம்
நிகழுஞ்சேண்சேய்மைதூரநீளிடைதானுமப்பேர். (௧௨)

வளைவின்பெயர்—குடிலம், குலாவல், கோணல், கோட்டம், கூன், கோண், வளாவல், தட்டு, வாங்கல், வணர். க0.
பரந்தவடிவின்பெயர்—படலை, படர்ச்சி, பம்பல். ௩.
குமிழ்ப்புவடிவின்பெயர்—புளகம். க.
மொக்குள்வடிவின்பெயர்—கொப்புள். க.

உட்டுளையின்பெயர்—குழல், சுசிர், தூம்பு, நாழி, புரை, வேய், வேணு, சுரை, நாளம். சு.
துளையுடைப்பொருளின்பெயர்—புழை, குழல். உ.
சர்ச்சரையின்பெயர்—பிணர். க.
மயிர்த்தொகுதிகதிர்த்தொகுதிபோல்வனவற்றின்பெயர்—கற்றை. க

மிகுதியின்பெயர்—மதம், நனி, பெருகல், ஊக்கல், விதப்பு, சால, அதிகப், சிறப்பு, இறப்பு, அலை, தவ, அமலை, ஆன்றல், கதழ்வு, பிறங்கல், கூர், கழுமல், பூரிப்பு, ஊங்கு, புதுமை, உருத்தல், பொங்கல். உஉ.

உயர்ச்சியின்பெயர்—மோடு, ஊக்கம், ஓங்கல், வார்தல், சேண், ஒழுக்கம், பொங்கல், நிமிர்தல், புங்கம், பரி, புரை, உச்சப், துங்கம், நிவப்பு, உகப்பு, மிசை, மேடு, பிறங்கல், ஏந்தல், உன்னதம், சிகரம், உத்துங்கம். உஉ.

விரிவின்பெயர்—விசாலம், விபுலம். உ.
பரப்பின்பெயர்-பரவை,பப்பு,அழுவம்,தாவல்,பாய்தல்,ஞெமிர்தல்சு
கூடலின்பெயர்—பயினி, சங்கம். உ.
பருமையின்பெயர்—பீனம், பனம், பரூஉ. ௩.

பெருமையின்பெயர்—பாடு, மாண், பாழி, மீளி, பணை, பொழில், பகடு, மூரி, மோடு, மால், தடம், வீறு, முடலை, கொன், கருமை. அண்ணல், ஈடு, மா, நனி, மானம், இருமை, கயவு, ஏந்தல், பீடு, வான், குவவு, செம்மை. உஎ,

நுண்மையின்பெயர்—அணு, நுழை, முளரி, நுட்பம், ஆய்தல்,முள், அயிர், நுணங்கு, நுணுகு, நுவணை, நூழை, நொசிவு. கஉ.
அற்பத்தின்பெயர்—கணம், இறை, வறிது, சின்னம், கன்று, ஆசு, தன்னம், ஒட்டு, இலம், தோகம், இட்டிடை. கக.

அகலத்தின்பெயர்—அகறல், கண்ணறை, பாழி, ஆய்வு, படர்தல், ஆன்றல், அகலுள், வியலிடம். அ.
செவ்வையின்பெயர்—செம்மை,இருசு,செப்பம்,செவ்வன்,நேர். ரு.
தூரத்தின்பெயர்—சேண், சேய்மை, நீளிடை. ௩.

வடிதலேயொழுகல்போகல்வரியுறைவார்தநீர்தல்
நெடிலொடாயதமேநேர்புநெடுமைசேண்கொடிநீளப்பேர்
அடையவெல்லாஞ்சமத்தமடங்கலேயகிலம்யாவும்
முடியவேயனைத்தகண்ட முழுவதாமுற்றுமப்பேர். (கங)

குறைதலின்பேர்சிரப்பேகுன்றலேயருகலஃகல்
சிறுகலேயீனமூனஞ்சிங்கலேயெஞ்சறேய்வாய்
துறுமலேசடிலத்தோடுதுன்னலேகஞறல்வீங்கல்
செறிநளிபொதுளல்செற்றுத்திணுங்கல்பத்துநெருங்கல். (கச)

பிறங்குதறிளைத்தலார்தல்பெருகுதல்கழுமன்மல்கல்
நிறைந்திடலார்துவன்றல்பூரணங்கமழுநேரும்
பறைர்தபால்பயலருத்தம்பாகங்கூறைந்தும்பாதி
அறைந்தசீர்குருக்கணஞ்ஞாட்பதிபாரம்பொறையுமாமே. (கரு)

மிருதுவேசுகுமாரங்கோமளஞ்சாயல்கயவுமென்மை
மருவியவிலகுநொவவோடிலேசிவைவகுக்குநொய்மை
துருவமேதுவமேசற்றுஞ்சலியாதுதோன்றிநிற்றல்
கருதுபற்றுக்கோடேற்றங்கந்துதூத்தஞ்சமும்பேர். (கசா)

அளவையேகடணைகச்சமளத்தலினுமமுப்பேர்
அளவின்மைபமாணமற்றையபாரமேயநந்தமுப்பேர்
வெளிபடாத்துதைதலோடுதைததலுமிடைதலென்ப
ஒளிபெறுகழிவுங்கூர்ப்புமுள்ளதுசிறத்தலின்பேர். (கஎ)

அடிமுதலெழுவாய்மோனையாதிபூருவந்தலைத்தாள்
இடைசமன்பகலேநாப்பணெய்துமத்தியநள்ளுப்பேர்
கடையின்பேரிறுதியந்தங்காட்டியபின்னேமுற்று
முடிவுடனெல்லையாகுமொழிந்திடுமீறுமப்பேர். (கஅ)

தாறொடுவரையேமானந்தனைதுணையவதிமட்டே
காறொடுபரிமாணங்களளவின்பேர்கருதிலொன்பான்
கூறியவெல்லையின்பேர்கொற்றமேவரைப்புக்காட்டை
ஏறியபரியந்தத்தோடேணியிவவைந்துமென்ப. (ககூ)

குருகுபாறவளம்வெள்ளைகுருத்துவால்சுவேதம்பாண்டு
நரைவிளர்பத்தும்வெண்மைசிதமுஞ்சுக்கிலமுநாட்டும்
குருதிகிஞ்சுகமிராகங்குறித்திடுஞ்சேதுப்பூவல்
அருணஞ்சேட்சோணஞ்செக்கரரத்தஞ்சேப்பிவைசிவப்பாம். (உ0)

நீளத்தின்பெயர்—வடிதல், ஒழுகல், போகல், வரி, உறை, வார்தல, நீதல், நெடில், ஆயதம், நேர்பு, நெடுமை, சேண், கொடி. ௧௩.

முழுவதினபெயர்—அடைய, எல்லாம், சமத்தம், அடங்கல், அனைவும், யாவும், முடிய, அனைத்து, அகண்டம், முற்றும். ௧௦.

குறைதலின்பெயர்—நிரப்பு, குன்றல், அருகல், அஃகல், சிறுகல், ஈனம், ஊனம், சிங்கல், எஞ்சல், தேய்வு. ௧௦.

நெருங்கலின்பெயர்—துறுமல், சடிலம், துன்னல், கஞறல், விசி கல், செறி, நளி, பொதுளல், செற்று, திணுங்கல். ௧௦.

நிறைந்திடலின்பெயர்—பிறங்குதல், திளைத்தல், ஆர்தல், பெருகு தல், கழுமல், மல்கல், துவன்றல், பூரணம், கபம். ௯.

பாதியின்பெயர்—பால், பயல், அருத்தம், பாகம், கூறு. ௫.

பாரத்தின்பெயர்—சீர், குரு, கனம், ஞாட்பு, பொறை. ௫.

மென்மையின்பெயர்—மிருது, சுகுமாரம், கோமளம், சாயல், கயவு. ௫.

நொய்ம்மையின்பெயர்—இலகு, நொவவு, இலேசு. ௩.

சலியாதுநிற்றலின்பெயர்—துருவம், துவம். ௨.

பற்றுக்கோட்டினபெயர்—ஊற்றம், கந்து, தூ, தஞ்சம். ௪.

அளத்தலின்பெயர்—அளவை, கடன, கச்சம். ௩.

அளவின்மையின்பெயர்—அமானம், அபாரம், அநந்தம். ௩.

மிடைதலின்பெயர்—துதைதல், ததைதல். ௨.

உள்ளதுசிறத்தலின்பெயர்—கழிவு, கூர்ப்பு. ௨.

அடியின்பெயர்—முதல், எழுவாய், மோனை, ஆதி, பூருவம், தலைத்தாள். ௬.

இடையின்பெயர்—சமன், பகல், நாப்பண், மத்தியம், நள். ௫.

கடையின்பெயர்—இறுதி, அந்தம், பின், முற்று, முடிவு, எல்லை, ஈறு. ௭.

அளவின்பெயர்—தாறு, வரை, மானம், தனை, துணை, அவதி, மட்டு, காறு, பரிமாணம். ௯.

எல்லையின்பெயர்—கொற்றம், வரைப்பு, காட்டை, பரியந்தம், ஏணி. ௫.

வெண்மையின்பெயர்—குருகு, பால், தவளம், வெள்ளை, குருத்து, வால், சுவேதம், பாண்டு, நரை, விளர், சிதம், சுக்கிலம். ௧௨.

சிவப்பின்பெயர்—குருதி, கிஞ்சுகம், இராகம், சேது, பூவல், அருணம், சேய், சோணம், செக்கர், அரத்தம், சேப்பு. ௧௧.

பாசுபையரிதஞ்சாமம்பசுமைசாமளமேபச்சை
பேசுபிங்கலப் பசப்பும்பீதகப்பீதம்பொன்மை
பூசியகுரால்புற்கோடுபுகர்கபிலமுமாமென்ப
மாசின்பேர்கறைகளங்கமலினமாங்கசடுமப்பேர். (௨௧)

இருண்மணிநீலநல்லமேற்றகாழகமேகாளம்
கருள்களங்கரிகார்மால்கறைமாயங்கறுப்பின்பேரே
விரியன்மின்னிலவுவில்வாள்வெயினிழல்வாமநீமம்
அரிநகைகிரணங்காந்தியாஞ்சோதியொளியீரேழ்பேர். (௨௨)

அலங்குதனகல்விளங்கலவிர்தலிஞெடுவயங்கல்
இலங்குதன்மினிர்தன்மின்னலிலகுதலுடனிமைத்தல்
துலங்குதலொளிர்தலெங்குஞ்சுடருதல்பிறழ்தலீரேழ்
நலங்கொளவொளிசெயற்பேர்தயங்கலுநாட்டலாமே. (௨௩)

எழில்வண்ணம்யாணர்மாமையிராமமேர்நவவிநோக்குச்
செழுமையேசேடுசெவ்விசித்திரநலமேமாதர்
குழகொடுபொற்புநன்குகோலமேமணிவனப்புப்
பழிபடாவிடங்கமாழைபத்திரந்தோட்டிபாங்கு. (௨௪)

சுந்தரமணங்குமஞ்சுசொக்குத்தேசிகமப்பொன்னே
சந்தங்காரிகைகவின்பூத்தளிமமேவாமங்காமர்
அந்தமேமயமேயொண்மையாய்ந்தவாறேழுந்தானே
வந்திடுமழகின்பேராம்வட்கல்புல்லெனன்மழுங்கல். (௨௫)

வரிபுகர்சாயல்சந்தமாமைகேழ்பசப்புவண்ணம்
குருவுருவருணமேனியீராறுநிறப்பேர்கூறும்
கருதுகட்டழகுகாமர்கருதலங்காரமும்பேர்
பெருகியவிசித்திரந்தான்பேரழகாகுமென்ப. (௨௬)

குருளையேமழவுவெண்மைகுழவுகோமளமேகொம்மை
புருவையெளவனமேநாகுபோதகந்தருணநவ்வி
முருகிளையிளமையீரேழ்முற்றலேவிருத்தமூப்பாம்
மருவியவண்ணஞ்சந்தம்வடிவின்பேர்செண்ணமாமே. (௨௭)

மிடல்வயந்திண்மைமைந்துமெய்ந்நலந்திரமும்பல்
முடலைகொன்வாய்மைகூளிமூரியேயூக்கமீளி
அடல்விறலீடேயேணேயாண்மையேதிறலேநோன்மை
முடுகேலேமல்லல்பாழிமொய்ம்புரன்முரணேதுப்பு. (௨௮)

பச்சையின்பெயர்—பாசு, பை, அரிதம், சாமம், பசுமை, சாமளம். சு.
பொன்மையின்பெயர்—பிங்கலம், பசப்பு, பீதகம், பீதம். ச.
புகர்நிறத்தின்பெயர்—குரால், புற்கு, கபிலம். ஈ.
மாசின்பெயர்—கறை, களங்கம், மலினம், கசடு. ச.

கறுப்பின்பெயர்—இருள், மணி, நீலம், நல்லம், காழகம், காளம், கருள், களம், காரி, கார், மால், கறை, மாயம். கஈ.
ஒளியின்பெயர்—விரியல், மின், நிலவு, வில், வாள், வெயில், நிழல், வாமம், நீமம், அரி, நகை, கிரணம், காந்தி, சோதி. கச.

ஒளிசெயலின்பெயர்—அலங்குதல், நகல், விளங்கல், அவிர்தல், வயங்கல், இலங்குதல், மிளிர்தல், மின்னல், இலகுதல், இமைத்தல், துலங்குதல், ஒளிரல், சுடருதல், பிறழ்தல், தயங்கல். கரு.

அழகின்பெயர்—எழில், வண்ணம், யாணர், மாமை, இராமம், ஏர், நவவி, நோக்கு, செழுமை, சேடு, செவ்வி, சித்திரம், நலம், மாதர், குழகு, பொற்பு, நன்கு, கோலம், மணி, வனப்பு, விடங்கம், மாழை, பத்திரம், தோட்டி, பாங்கு. உரு.

சுந்தரம், அணங்கு, மஞ்சு, சொக்கு, தேசிகம், அம், பொன், சந்தம், காரிகை, கவின், பூ, தளிமம், வாமம், காமர், அந்தம், மயம், ஒண்மை. கஎ. (ஆ சஉ.)
மழுங்கலின்பெயர்—வட்கல், புல்லெனல். உ.

நிறத்தின்பெயர்—வரி, புகர், சாயல், சந்தம், மாமை, கேழ், பசப்பு, வண்ணம், குரு, உரு, வருணம், மேனி. கஉ.
கட்டழகின்பெயர்—காமர், அலங்காரம். உ.
பேரழகின்பெயர்—விசித்திரம். க.

இளமையின்பெயர்—குருளை, மழவு, வெண்மை, குழவு, கோமளம், கொம்மை, புருவை, யௌவனம், நாகு, போதகம், தருணம், நவவி, முருகு, இளை. கச.
மூப்பின்பெயர்—முற்றல், விருத்தம். உ.
வண்ணத்தின்பெயர்—சந்தம். க.
வடிவின்பெயர்—செண்ணம். க.

வலியின்பெயர்—மிடல், வயம், திண்மை, மைந்து, மெய்ந்நலம், தீரம், உம்பல், முடலை, கொன், வாய்மை, கூளி, மூரி, ஊக்கம், மீளி, அடல், விறல், ஈடு, ஏண், ஆண்மை, திறல், நோன்மை, மூடுகல், மல்லல், பாழி, மொய்ம்பு, உரன், முரண், துப்பு. உஅ.

தானமேமதமேதோற்றஞ்சத்துவந்தாவேயாற்றல்
மானமல்லுரமேமுன்புமதுகையேயெறுழெண்ணேந்தும்
ஊனமில்வலிவீரப்பேருறுபராக்கிரமஞ்சூரம்
ஈனமில்சௌரியம்வீரியமேசேவகமுமாமே. (உக)

தளர்விலாவமைதியான்றல்சால்பொடுசெழுமைவாய்த்தல்
வளநிறைமாண்புமாண்டன்மாண்பதுமாட்சிமைப்பேர்
களிர்பனியளிசீதந்தண்ணன்மழைசாந்தமேழும்
குளிர்வளப்பங்கொழுப்பாங்கொழுமையேசெழுமையென்ப. (ருO)

மேதைஞாபகந்தெருட்சிமிகுமதியுணர்வுஞானம்
போதமேதெளிவுபுந்திபுலனுரனறிவின்பேராம்
மேதகுபுனிதந்தூவேமேத்தியஞ்சௌசந்தூய்மை
தூய்துபாவனமேசுத்தஞ்சசிபவித்திரந்துப்பும்பேர். (ருக)

குறைவிலாவலனேவென்றிகொற்றமேவெற்றமுல்லை
விறல்சயம்வாகையாடுவிசயம்பத்திவைவெற்றிப்பேர்
மறுவில்சீர்விபவமாடுவாழ்க்கையேவிருத்தியாக்கம்
பொறியிடந்திருப்பெருக்கம்போற்றியவெறுக்கைசெல்வம். (ருஉ)

பரிவுநார்வாரநேசம்பற்றளிபாசபண்பாம்
புரிவாணநேயமுமபோபோற்றியதயையிரக்கம்
கருணையேகிருபைமற்றுக்கருதியதகவிவைவந்தும்
அருளின்பேருழுவலென்பதெழுமையுந்தொடர்ந்தவன்பு. (ருரு)

உன்னமேயகமேசித்தமுள்ளமேயிதயநெஞ்சு
முன்னமேழ்மனதின்பேராமுதிர்சிந்தைநினைவுசேத்துச்
சொன்னவிங்கிதங்கருத்துச்சூழலெண்ணங்குறிப்பாம்
வன்மைநாட்டியந்தியானமதம்வினையேடலும்பேர். (ருச)

கண்ணலேகருதல்பேணல்காணலேநுதலல்சுட்டல்
எண்ணலேபுகறலெட்டுங்குறித்திடலென்னலாகும்
நண்ணியகணித்தலோடுநாட்டியகுணித்தலெல்லாம்
மண்ணுளோர்வரையறுத்தற்பெயரென்பமதித்தலும்பேர். (ருரு)

உன்னலேபடர்தலூழ்த்தலுள்ளுதலொடுசிந்தித்தல்
முன்னலேவலித்தலுகமொழிபவேநினைத்தலெண்பேர்
மன்னுசெம்மாப்பேமாப்புமற்றுறையேக்கழுத்தமும்பேர்
இன்னவையிறுமாப்பாகுமிவையேவீற்றிருத்தலென்ப. (ருசா)

தானம், மதம், தோற்றம், சத்துவம், தாவு, ஆற்றல், மானம், மல், உரம், முன்பு, மதுகை, எறும். கஉ. (ஆ௨ ௪0.)
வீரத்தின்பெயர்—பராக்கிரமம், சூரம், சௌரியம், வீரியம், சேவகம். ரு.

மாட்சிமையின்பெயர்—அமைதி, ஆன்றல், சால்பு, செழுமை, வாய்த்தல், வளம், நிறை, மாண்பு, மாண்டல், மாண். க0.
குளிரின்பெயர்—நளிர, பனி, அளி, சீதம், தண், மழை, சாந்தம். எ.
வளப்பத்தின்பெயர்—கொழுப்பு. க.
கொழுமையினபெயர்—செழுமை. க.

அறிவின்பெயர்—மேதை, ஞாபகம், தெருட்சி, மதி, உணர்வு, ஞானம், போதம், தெளிவு, புத்தி, புலன், உரன். கக.
சுத்தத்தின்பெயர்—புனிதம், தூ, பேத்தியம், சௌசம், தூய்மை, தூய்து, பாவனம், சுசி, பவித்திரம், துப்பு. க0.

வெற்றியின்பெயர்—வலன், வென்றி, கொற்றம், வெற்றம், முல்லை, விறல், சயம், வாகை, ஆடு, விசயம். க0.
செல்வத்தின்பெயர்—சீர், விபவம், யாடு, வாழ்க்கை, விருத்தி, ஆக்கம், பொறி, இடம், திரு, பெருக்கம், வெறுக்கை. கக.

அன்பின்பெயர்—பரிவு, நார, வாரம, ஈரம், பற்று, அளி, பாசம், புரிவு, ஆணம், நேயம். க௦.
அருளின்பெயர்—தயை, இரக்கம், கருணை, கிருபை, தகவு. ரு.
எழுமையுந்தொடர்ந்தவன்பின்பெயர—உழுவல். க.

மனத்தின்பெயர்—உன்னம், அகம், சித்தம், உள்ளம், இதயம், நெஞ்சு, முன்னம். எ.
குறிப்பின்பெயர்—சிந்தை, நினைவு, சேத்து, இங்கிதம், கருத்து, சூழல், எண்ணம, வன்மை, நாட்டியம், தியானம், மதம், வினை, ஏடல். கரு.

குறித்தலின்பெயர்—கண்ணல், கருதல், பேணல், காணல், நுதலல், சுட்டல், எண்ணல், புகறல். அ.
வரையறுத்தலின்பெயர்—கணித்தல், குணித்தல், மதித்தல். ௩.

நினைத்தலின்பெயர்—உன்னல், படர்தல், ஊழ்த்தல், உள்ளுதல், சிந்தித்தல், முன்னல், வலித்தல், ஊகம். அ.
ஏமாப்பினபெயர்—செம்மாப்பு, ஏக்கழுத்தம். உ.
இவ்விரண்டும் இறுமாப்பிற்கும் பெயராம், இவையே வீற்றிருத்தற்கும் பெயராம்.

தருக்கொடுமலர்ச்சிமதத்தந்தன்குபாடவங்களிப்புச்
செருக்கபிமானமேமந்திகழ்பெருமிதமதர்ப்புப்
பொருத்திடுமதர்வீராறுபபுகலுமுள்ளக்களிப்பாம்
உருத்திடுஞானஞ்சீலமேமோதுநல்லுணர்வினுமம். (௩௭)

நகைகடிமகிழ்ச்சியேமநயஞ்சுகந்தொய்யலின்பம்
மகிழுமானந்தமொன்றேமன்னுபேரின்பமென்ப
திகழ்நனவுணர்வுதேறறேற்றநற்றெளிவுநாற்பேர்
புகழ்பெறுகமிததனென்றல்சகித்திடல்பொறைமுப்பேரே. (௩௮)

நறுமையேவிழுமஞ்சேடுநயநன்றியாணர்நன்னர்
உறுதியாங்கடவுளொண்மையுததமம்பத்துநன்றும்
அறமென்பதருமந்தானேயாகுமூழின்பேர்தெய்வம்
நிறுவியநிதியேயுண்மைவரன்முறைநியதியும்பேர். (௩௯)

தவமென்பவிரதநோன்பாமுவவொடுதவசுமாகும்
உவகைமாராயமற்றையோகையேபிரியமும்பேர்
நவமதாங்கேண்மைகண்ணேநாகரிகங்கண்ணோட்டம்
இவைநயப்புணர்வுமாமேயேணிலையுடைமையென்ப. (௪0)

தூக்கியகேண்மையேகேடொடர்பென்பநட்புமுப்பேர்
ஊக்கமேயுரனிரண்டுமுள்ளத்தின்மிகுதியென்ப
நீக்கிலாவகைதிறங்கணிகரிலாக்கூறுபாடே
ஆக்கமேபலன்பயம்பேறதிகமூதியமிலாபம். (௪௧)

வெறுப்பொடுமுனைவொல்லாமைவேண்டாமையுவர்ப்பேமாவே
அறுதிடலவாவின்மைப்பேரலமெனபதமையுமென்றல்
துறத்தல்சார்பறுத்தலோடுதுறவியேவிரதிமுப்பேர்
மறுத்தநாண்சமழ்ப்புவெள்கல்வட்கலுட்கிலச்சைவெட்கம். (௪௨)

ஒருமைதோட்டிமைகுறிப்போடொற்றுமையென்பமுப்பேர்
தருபெருந்துணையேதுப்புச்சகாயமேயிணையும்பேராம்
பெருகியமன்னறுஞ்சநிதிநிலைபெறுதன்முப்பேர்
விரவியதாணுவும்பேர்மேவியவாணையேவல். (௪௩)

செயன்முறைநடையாசாரஞ்செய்திகையறையேகையே
இயல்புமஞ்சரியேசீர்சாரித்திரமொழுக்கம்பத்தாம்
மயலறுநெறிநியாயமரியாதைநீதிமுப்பேர்
வியனுறுமழுக்கின்மைக்குவிமலமுமமலமும்பேர். (௪௪)

உள்ளக்களிப்பின்பெயர்—தருக்கு, மலர்ச்சி, மத்தம், தன்கு, பாடவம், களிப்பு, செருக்கு, அபிமானம், ஏமம், பெருமிதம், மதர்ப்பு, மதர்வு. கஉ.

நல்லுணர்வின்பெயர்—ஞானம், சீலம். உ.

இன்பத்தின்பெயர்—நகை, கடி, மகிழ்ச்சி, ஏமம், நயம், சுகம், தொயயல். எ.

பேரின்பத்தின்பெயர்—ஆனந்தம். க.

தெளிவின்பெயர்—நனவு, உணர்வு, தேறல், தேற்றம். ச.

பொறையின்பெயர்—கமித்தல், நோன்றல், சகித்திடல். ங.

நன்றின்பெயர்—நறுமை, விழுமம், சேடு, நயம், நன்றி, யாணர், நன்னர், கடவுள், ஒண்மை, உத்தமம். கO.

தருமத்தின்பெயர்—அறம். க.

ஊழின்பெயர்—தெய்வம், விதி, உண்மை, வரன்முறை, நியதி. ரு.

தவத்தின்பெயர்—விரதம், நோன்பு, உவவு, தவசு. ச.

உவகையின்பெயர்—மாராயம், ஓகை, பிரியம். ங.

கண்ணோட்டத்தினபெயர்-கேண்மை, கண், நாகரிகம், நயப்புணர்வு. ச.

நிலையுடைமையின்பெயர்—ஏண். க.

நட்பின்பெயர்—கேண்மை, கேள், தொடர்பு. ங.

உள்ளத்தின்மிகுதியின்பெயர்—ஊக்கம், உரன். உ.

கூறுபாட்டின்பெயர்—வகை, திறம், உ.

இலாபத்தின்பெயர்—ஆக்கம், பலன், பயன், பேறு, அதிகம், ஊதியம். சா.

அவாவின்மையின்பெயர்—வெறுப்பு, முனிவு, ஒல்லாமை, வேண்டாமை, உவர்ப்பு, மா, அறுத்திடல். எ.

அமையுமென்றலின்பெயர்—அலம். க.

துறத்தலின்பெயர்—சார்பறுத்தல், துறவி, விரத்தி. ங.

வெட்கத்தின்பெயர்—மறுத்தல், நாண், சமழ்ப்பு, வெள்கல், வட்கல், உட்கு, இலச்சை. எ.

ஒற்றுமையின்பெயர்—ஒருமை, தோட்டிமை, குறிப்பு. ங.

சகாயத்தின்பெயர்—துணை, துப்பு, இணை. ங.

நிலைபெறுதலின்பெயர்—மன்னல், துஞ்சல், திதி, தாணு. ச.

ஏவலின்பெயர்—ஆணை. க.

ஒழுக்கத்தின்பெயர்—செயல், முறை, நடை, ஆசாரம், செய்தி, கையறை, கை, இயல்பு, மஞ்சரி, சாரித்திரம். கO.

நீதியின்பெயர்—நெறி, நியாயம், மரியாதை. ங.

அழுக்கின்மையின்பெயர்—விமலம், அமலம். உ.

# எட்டாவது பண்புபற்றியபெயர்த்தொகுதி.

தொல்லைமுன்பண்டுமுந்தைதொன்றுபூருவம்புராணம்
ஒல்லையேபுராதனத்தோடுற்றவூழ்பழமைபத்தாம்
நல்லநூதனம்விருந்துநவங்கடிபுத்தேள்கோடி
புல்லியயாணர்வம்புபுனிறென்பானபுதுமையின்பேர். (௪௫)

நீக்கிலாத்துப்புமல்லனெடியமங்கலமேபூவே
போக்கமேமலர்ச்சிபொம்மல்பொற்பிவைபொலிவெண்பேராம்
திர்க்கமேதரிப்புமன்றந்தேறிவைநிச்சயப்பேர்
ஆக்கமேநந்தலென்பவபிதானநாமம்பேராம். (௪௬)

பாங்கொடுகொணிதாயப்பால்கெழுதகைமையாட்சி
ஈங்கிவையுரித்தினும்மெண்ணமேகணிதமென்ப
நீங்கருநிலைதண்டாமைநிகரிலானுமையும்பேர்
பாங்குறுமரபுபாரம்பரியமேமுறைமையாகும். (௪௭)

வியப்புவிம்மிதத்தினோடுவிசித்திரமிறும்பூதின்ன
மயக்கிலாவதிசயப்பேர்மற்றையற்புதமுமாகும்
செயத்தகுகாரணப்பேர்திறமேதுப்பொருட்டுவாயில்
நயத்தகுநிமித்தமும்பேர்நாடுங்கால்வழியேபின்னும். (௪௮)

மல்லொடுவளமேவாரிபகுதியும்வருவாயின்பேர்
புல்லுதல்கெழுமலென்பபொருந்தலேயவையுமப்பேர
பல்பலமுறையின்பேரேபரியாயந்திணைகுடிப்பேர்
நல்லதாம்வெகுவிதந்நானாவிதம்விவிதமாமே. (௪௯)

அறிந்திடும்பொருட்பேர்சித்துச்சேதனமென்பராய்ந்தோர்
அறிந்திடாப்பொருளசித்தோடசேதனஞ்சடமுமாகும்
சிறந்திடவுயிர்களீசனசெய்திடுஞ்சிலநூலை
அறிந்துமஃதறியாதாரைப்போறலேயறிமடந்தான். (௫௦)

அறிவின்மைமடமெய்யாமைமருட்சிபேதைமையென்றாகும்
பெறுமுதுக்குறைவுதானேபேரறிவென்றுகூறும்
குறைவிலாக்கோணைகன்னிகுமரியேயழிவின்மைப்பேர்
உறவியேயுறவினைபேராநிறைவேறல்சபலமாமே. (௫௧)

உம்மையேகழிபிறப்பாமொழிந்திடுவருபிறப்பிற்
கம்மையுமறுமையும்பேரானவிப்பிறப்பினுமம்
இம்மையாமொருபிறப்பேயியம்பிடிலொருமைதானே
எம்மையெப்பிறப்புமென்பவேழ்பவமெழுபிறப்பாம். (௫௨)

பழமையின்பெயர்—தொல்லை, முன், பண்டு, முந்தை, தொன்று, பூருவம், புராணம், ஒல்லை, புராதனம், ஊழ். க0.
புதுமையின்பெயர்—நூதனம், விருந்து, நவம், கடி, புத்தேள், கோடி, யாணர், வம்பு, புனிறு. கூ.
பொலிவின்பெயர்—துப்பு, மல்லல், மங்கலம், பூ, போக்கம், மலர்ச்சி, பொம்மல், பொற்பு. அ.
நிச்சயத்தின்பெயர்—திர்க்கம், தரிப்பு, மன்றம், தேறு. ச.
ஆக்கத்தின்பெயர்—நந்தல். க.
பேரின்பெயர்—அபிதானம், நாமம். உ.
உரித்தின்பெயர்—பாங்கு, காணி, தாயம், பால், கெழுதகைமை, ஆட்சி. சா.
கணிதத்தின்பெயர்—எண்ணம். க.
நிலைநீங்காமையின்பெயர்—தண்டாமை, ஆறாமை. உ.
முறைமையின்பெயர்—மரபு, பாரம்பரியம். உ.
அதிசயத்தின்பெயர்—வியப்பு, விம்மிதம், விசித்திரம், இறும்பூது, அற்புதம். ரு.
காரணத்தின்பெயர்—திறம், ஏது, பொருட்டு, வாயில், நிமித்தம். ரு.
பின்னின்பெயர்—வழி. க.
வருவாயின்பெயர்—மல், வளம், வாரி, பகுதி. ச.
பொருந்தலின்பெயர்—புல்லுதல், கெழுமல், அமைவு. ந.
பல்பலமுறையின்பெயர்—பரியாயம். க. குடியின்பெயர்—திணை. க.
வெகுவிதத்தின்பெயர்—நானாவிதம், விவிதம். உ.
அறிவுடைப்பொருளின்பெயர்—சித்து, சேதனம். உ.
அறிவில்பொருளின்பெயர்—அசித்து, அசேதனம், சடம். ந.
அறிந்துமறியார்போறல்—அறிமடம். க.
அறிவின்மையின்பெயர்—மடம், எய்யாமை, மருட்சி, பேதைமை. ச.
பேரறிவின்பெயர்—முதுக்குறைவு. க.
அழிவின்மையின்பெயர்—கோணை, கன்னி, குமரி. ந.
உறவின்பெயர்—உறவி. க. நிறைவேறலின்பெயர்—சபலம். க.
கழிபிறப்பின்பெயர்—உம்மை. க.
வருபிறப்பின்பெயர்—அம்மை, மறுமை. உ.
இப்பிறப்பின்பெயர்-இம்மை. க. ஒருபிறப்பின்பெயர்—ஒருமை. க.
எப்பிறப்பிற்கும்பெயர்—எம்மை. க.
எழுபிறப்பின்பெயர்—ஏழ்பவம். க.

முருகுதேன்கடியாமோதமோதவங்கந்தம்வேரி
விரைநறைமன்றல்வம்புவெறிமருமணம்பன்முப்பேர்
பரிமளமிகுமணப்பேர்பரவிநாறுதல்கந்தித்தல்
விரவியகமழ்தலும்பேர்மேவுதூர்க்கந்தம்பூதி. (ருங)

தூயசேறமுதுசாரஞ்சுவைதீந்தேமினிமையின்பேர்
தீயதேங்கனிதித்திப்பாமதுரமுமாகுந்தித்தம்
ஆயதுகைத்தலிணபேராமிலம்புளிப்பதாகும்
காயமேகடுகெங்காழ்ப்புக்கரில்காரங்கடுக்கார்ப்பாமே. (ருச)

வெருவுசூர்பீர்வெறுப்புவெறிவெடிகவலைபீதி
உருவுபேம்பிறப்புக்கொன்னேயுட்குநாம்பனிப்பணங்கு
தருபுலம்பதிரப்படுப்புத்தரம்பயமுருமச்சப்போ
தூரிதமேபிரமம்வர்துசூழ்கதனங்கலக்கம். (ருரு)

நிலைபெருதோடறேங்கன்ஞெரேலெனல்கூசறிட்கல்
உலமரலஞுக்கனஞொள்கலொடுதுடுக்கெனலேதுட்கல்
குலைதல்மெய்துறலேயச்சக்குறிப்புததுண்ணெனலுங்கூறும்
தலையிழிபுடனேசாய்பபுத்தருசமேதண்மைதாழ்வு. (ருசா)

விதிர்ப்பொடுவிதப்புக்கம்பர்விதலைகம்பிதம்பனிப்புப்
பொதிர்ப்புலைவிலைவநடுக்கமபொருந்திடுவெளிமையெண்மை
பதிப்பிலாப்பரிபவங்கண்மற்றிழிதகவுமாகும
பிதற்றுசிற்றறிவுவெண்மைவெளிறுபுலலறியின்பேரே. (ருஎ)

ஆசுதோய்பிழையேபோக்கேயரில்கரில்பழியரிப்புக்
காசுமைதவறேமானங்கறைகுறை.றிறைகழிப்பு
மாசொடுதுகளேதப்புமறுநவைஉசைகொழிப்பே
ஏசொடுபுரையேகோதேயேதமுவொன்பான்குற்றம். (ருஅ)

வழுக்கொடுமறவிபுன்மைபறலொடுபொல்லாங்கேகீழ்
இழுக்கொடுசோர்வுபொசசாப்பிகழ்ச்சியுமறத்தலின்பே
பழித்திடுந்துவவுமனலுய்பகாந்திடுமிழிவுதானே
இழைதிடுந்தளர்ச்சியேட்டைடயசாவுமாமிளைவிரக்கம். (ருகூ)

கடுகியவெம்மைகோரங்கருமையேயுருமம்வெப்பம்
உடனழலழனந்தாபமுருப்பமுட்டணப்பேரொனபான்
கொடுமையின்பேரேசண்டங்கோடணைகடினங்கோரம
கடுமையுக்கிரமுறைப்புக்கலாஞ்சடம்வஞ்சம்பூதி. (சா0)

மணத்தின்பெயர்—முருகு, தேன், கழி, ஆமோதம், மோதவம், கந்தம், வேரி, விரை, நறை, மன்றல், வட்டு, வெறி, மரு. ௧௩.
மிகுமணத்தின்பெயர்—பரிமளம். ௧.
நாறுதலின்பெயர்—கந்தித்தல், கமழ்தல். ௨.
துர்க்கந்தத்தின்பெயர்—பூதி. ௧.

இனிமையின்பெயர்—தேறு, அமுது, சாரம், சுவை, தீம், தேம். ௬.
தித்திப்பின்பெயர்—தேம், கனி, மதுரம். ௩.
கைத்தலின்பெயர்—தித்தம். ௧. புளிப்பின்பெயர்—ஆமிலம். ௧.
கார்ப்பின்பெயர்—காயம், கடுகம், காழ்ப்பு, கரில், காரம், கடு. ௬.

அச்சத்தின்பெயர்—வெருவு, சூர், பீர், வெறுப்பு, வெறி, வெடி, கவலை, பீதி, உருவு, பேம், பிறப்பு, கொன், உட்கு, நாம், பனிப்பு, அணங்கு, புலம்பு, அதிப்பு, அடுப்பு, தரம், பயம், உரும். ௨௨.
கலக்கத்தின்பெயர்—துரிதம், பிரமம், கதனம். ௩.

அச்சக்குறிப்பின்பெயர்—ஓடல், தேங்கல், ஞெரேலெனல், கூசல், திட்கல், உலமரல், அருக்கல், ஞொள்கல், துடுக்கெனல், துட்கல், குலைதல், வெய்துறல், துண்ணெனல். ௧௩.
தாழ்வின்பெயர்—தலையிழிபு, சாய்ப்பு, தஞ்சம், தண்மை. ௪.

நடுக்கத்தின்பெயர்—விதிர்ப்பு, விதப்பு, கம்பம், விதலை, கமபிதம், பனிப்பு, பொதிர்ப்பு, உலைவு. ௮.
எளிமையின்பெயர்—எண்மை, பரிபவம், இழிதகவு. ௩.
புல்லறிவின்பெயர்—சிற்றறிவு, வெண்மை, வெளிறு. ௩.

குற்றத்தின்பெயர்—ஆசு, தோம், பிழை, போக்கு, அரில், கரில், பழி, அரிப்பு, காசு, மை, தவறு, மானம், கறை, குறை, மிறை, கழிப்பு, மாசு, துகள், தப்பு, மறு, நவை, வசை, கொழிப்பு, ஏசு, புரை, கோது, ஏதம். ௨௭.

மறத்தலின்பெயர்—வழுக்கு, மறவி, புன்மை, மறல், பொல்லாங்கு, கீழ், இழுக்கு, சோர்பு, பொச்சாப்பு, இகழ்ச்சி. ௧0.
இழிவின்பெயர்—துவவு, மண். ௨.
தளர்ச்சியின்பெயர்—ஏட்டை, அசா. ௨.
இரக்கத்தின்பெயர்—இணைவு. ௧.

உட்டணத்தின்பெயர்—வெம்மை, கோரம், கருமை, உருமம், வெப்பம், அழல், அழனம், தாபம், உருப்பம். ௯.
கொடுமையின்பெயர்—சண்டம், கோடணை, கடினம், கோரம், கடுமை, உக்கிரம், உறைப்பு, கலாம், சடம், வஞ்சம், பூதி. ௧௧.

## எட்டாவது பண்புபற்றியபெயர்த்தொகுதி.

குறையிலம்பாடுமிச்சைகுறுவாழ்க்கைமிடிநிரப்புச்
சிறுமையேயொற்கமின்மைதீயநல்குரவேயல்கல்
வறுமையின்பெயர்பன்னொன்றும்வருதரித்திரமுமாகும்
மறலிகன்முனைமுரண்டாமடிதெவ்வோடரிபகைப்பேர். (௬௧)

வெறுத்தலேசினங்குரோதம்வெகுளிமற்றரிப்புச்சீற்றம்
செறித்திடுங்கலாங்கதங்கள்செயிரொன்பான்கோபத்தின்பேர்
கறுப்பொடுசிவப்பேபோதக்கன்றலேபுழுங்கல்சீறிக்
குறித்திடும்புகைதல்பொங்கிக்கொதித்தல்கோபக்குறிப்பாம். (௬௨)

குருத்தமுன்கோபம்வெம்பல்கொந்தலேகனிதல்கோம்பல்
பெருத்தகோபம்விடைத்தல்பெருகியமுனைதல்சீறல்
உருத்தலேயுலறல்காய்தலுடற்றறீவிரமுமாகும்
தரித்திடும்வயிரஞ்செற்றஞ்சலம்பவந்தொந்தம்வேரம். (௬௩)

உயவனுக்கங்கவர்சியுயங்குதல்கசிவணங்கே
அயர்வொடுநொசிவேநோவேயாய்வொடுமிறைசமழ்த்தல்
வயாவொடாகுலமழுங்கல்வருத்தமூவைந்தும்வைக்கும்
வியன்மிகுமேற்றனுள்ளல்சானூரமேதைமேன்மை. (௬௪)

வீற்றுருவிகிர்தம்பின்னம்விபரீதம்விரூபம்விள்ளல்
வேற்றுமைதிரிபுபேதம்விகடமீரைந்துந்தானே
ஏற்றியவேறுபாட்டுக்கியம்பியநாமமாகும்
போற்றியதனிமையேகம்புலம்புகேவலமுமாமே. (௬௫)

இருளுணராமைமத்தமிளமைமாழாத்தல்பித்தம்
வெருள்களிக்ழுமன்மோகமேவுமுன்மத்தமாழ்கல்
கழுதியவனந்தரேமங்களன்பேதுமையன்மைந்து
மருண்மறன்மான்றன்மூவேழ்மயக்கமாமயர்வுமப்பேர். (௬௬)

தீங்குகோளந்தராயஞ்செப்புவிக்கினமுட்டுப்பா
டோங்கியவலாபந்தட்டேயூறேயந்தராமுந்தீதாம்
ஆங்குளவலைசலாஞ்சியழுங்கலேமடியேஞொள்கல்
தூங்கலேயசைவேமந்தஞ்சோகமாலசியஞ்சோம்பாம். (௬௭)

குடிலம்புள்ளுவமேகூடங்குத்திரமாயைகுய்யம்
படிறுசாட்டியமேவஞ்சம்பட்டிமைதானுமப்பேர்
செடிசீத்தைசிதம்பிறேடுசேரணங்குணமின்மைப்பேர்
மிடித்ருந்தாமதப்பேர்விளம்பணம்விளம்பந்தாமே. (௬௮)

வறுமையின்பெயர்—குறை, இலம்பாடு, மிச்சை, குறுவாழ்க்கை, மிடி, நிரப்பு, சிறுமை, ஒற்கம், இன்மை, நல்குரவு, அல்கல், தரித்திரம். கஉ.
பகையின்பெயர்—மறல்,இகல்,முனை,முரண்,தா,மடி,தெவ,அரி. எ.

கோபத்தின்பெயர்—வெறுத்தல், சினம், குரோதம், வெகுளி, அரிப்பு, சீற்றம், கலாம், கதம், செயிர். கூ.
கோபக்குறிப்பின்பெயர்—கறுப்பு, சிவப்பு, கன்றல், புழுங்கல், புகைதல், கொதித்தல். சு.

முன்கோபத்தின்பெயர்—வெம்பல், கொந்தல், கனிதல், கோப்பல். ச.
பெருங்கோபத்தின்பெயர்—விடைத்தல், முனைதல், சீறல், உருத்தல், உலறல், காய்தல், உடற்றல், தீவிரம். அ.
* வைரத்தின்பெயர்—செற்றம், சலம், பவம், தொந்தம், வேரம். ரு.

வருத்தத்தின்பெயர்—உயவு, அனுக்கம், கவற்சி, உயங்குதல், கசிவு, அணங்கு, அயர்வு, நொசிவு, நோ, ஆய்வு, மிறை, சமழ்த்தல், வயாவு, ஆகுலம், அழுங்கல். கரு.
மேன்மையின்பெயர்—ஏற்றம், ஞெள்ளல், சானூரம், மேதை. ச.

வேறுபாட்டின்பெயர்—வீற்று, விகிர்தம், பின்னம், விபரீதம், விரூபம், விள்ளல், வேற்றுமை, திரிபு, பேதம், விகடம். க0.
தனிமையின்பெயர்—ஏகம், புலம்பு, கேவலம். ௩.

மயக்கத்தின்பெயர்—இருள், உணராமை, மத்தம், இளமை, மாழாத்தல், பித்தம், வெருள், களி, கழுமல், மோகம், உன்மத்தம், மாழ்கல், அனந்தர், ஏமம், களன், பேது, மையல், மைந்து, மருள், மறல், மான்றல், மயர்வு. உஉ.

தீதின்பெயர்—தீங்கு, கோள், அந்தராயம், விக்கினம், முட்டுப்பாடு, அலாபம், தட்டு, ஊறு, அந்தரம். கூ.
சோம்பின்பெயர்—அலசல், ஆஞ்சி, அழுங்கல், மடி, ஞொள்கல், தூங்கல், அசைவு, மந்தம், சோகம், ஆலசியம். க0.

வஞ்சத்தின்பெயர்—குடிலம், புள்ளுவம், கூடம், குத்திரம், மாயை, குய்யம், படிறு, சாட்டியம், பட்டிமை. கூ.
குணமின்மையின்பெயர்—செடி, சீத்தை, சிதம்பு, சீரணம். ச.
தாமதத்தின்பெயர்—விளம்பனம், விளம்பம். உ.

---

* வைரம்—நெடுங்காலமாக நிகழுங்கோபம்.

## எட்டாவது பண்புபற்றியபெயர்த்தொகுதி.

இழிவொடுதிரிதணந்தலிறுதலேலமுறிதல்கந்தல்
வழுகயஞ்சிதைவழுங்கன்மடிசுதங்கேடாநிந்தை
இழிவெள்ளணகலொல்லாமையிகழ்ச்சியாமுவர்ப்புமப்பேர்
குழைவுருவருவருப்புக்குற்சிதபயிர்ப்புமாமே. (௬௯)

மறமகங்களுடம்பங்கம்வருஞ்செடிதுரிதம்பாவம்
வறிதுகொன்வீண்விருதாமன்னியபயனிலாமை
அறைதருசந்தேகப்பேரயிர்ப்பையங்கடுத்தல்சங்கை
கறையிலோதலைக்கமடபேர்கைக்கிளையாகுமென்ப. (௭௦)

சிறந்திடுஞ்சன்மந்தோற்றஞ்செனனமேபவஞ்சனிப்புப்
பிறந்தையுற்பவமென்றேழுபிறப்பாமுற்பதியும்பேர்
அறைந்தசூதகமராசௌசம்புனிறேயீன்றணிமையின்போ
துறந்தயாலாமைபுப்புதசோகைமாதொடாப்பொருட்டே. (௭௧)

அன்றேவோடந்தோவாவோவதோவோடச்சோவையோ
எனனேயெற்றெனவெனுஞ்சொலதிசயமுறவிரங்கல்
மன்னுமௌவியமேயெனபமனக்கோட்டமழுக்காற்றின்பேர்
சொனனநோனாமைகூறஞ்சூழ்ந்திடும்பொருமைமுப்பேர். (௭௨)

அல்லலேயலக்கண்மமமரந்தைகோட்டாலேபீழை
செல்லல்கேதங்கலக்கஞ்சிறுமைகுருறுகண்புணகண்
சொல்லுமிட்டளமினறுவேதுனிபருவரலேதுக்கம
ஒல்லுநோயழுங்கல்பீடையுலமரலல்லகண்டப. (௭௩)

கவலையாதனையழுங்கண்கையாறுநடலைபையுள்
எவ்வமேதமவெறுப்பேயிடும்பையேயிடுக்கணின்னல்
வயவியபடர்பனித்தல்வறுமைவெய்துறலேபைதல்
வெவ்வியகவலைதீயவிழுமமாறேழுந்துன்பம். (௭௪)

மாதர்நச்சிச்சையேடைவயாநம்புநசைநயப்புக்
காதல்வெப்பம்விருப்பநகாமமேயிராகம்பற்றே
ஆதரம்பெட்புவேட்கையார்வமேமேவல்வெஃகல்
ஓதியவிழைவுஆவேழுறுபெயராசையாமே. (௭௫)

சூழ்தருமோகநம்பல்சொற்றிடுமிரதிவெஃகல்
தாழ்தலேகவர்தல்பெட்டல்சார்புடனிவறல்வேண்டல்
வீழ்தல்வேணவாவீராறும்வேட்கையின்பெருக்கமென்ப
மாழ்கியவிரகங்காமமதனமேகாமநோயாம். (௭௬)

கேட்டின்பெயர்—இழிவு, இரிதல், நந்தல், இறுதல், முறிதல், கந்தல், வழு, கயம், சிதைவு, அழுங்கல், மடி, சுதம். கஉ.
இகழ்ச்சியின்பெயர்—நிந்தை, இழிவு, எள்ளல், நகல், ஒல்லாமை, உவர்ப்பு. சு.
அருவருப்பின்பெயர்—குற்சிதம், பயிர்ப்பு, உ.

பாவத்தின்பெயர்—மறம், அகம், களுடம், பங்கம், செடி, துரிதம். சு.
பயனிலாமையின்பெயர்—வறிது, கொன், வீண், விருதா. ச.
சந்தேகத்தின்பெயர்—அயிர்ப்பு, ஐயம், கடுத்தல், சங்கை. ச.
ஒருதலைக்காமத்தின்பெயர்—கைக்கிளை. க.

பிறப்பின்பெயர்—சனனம், தோற்றம், செனனம், பவம், சனிப்பு, பிறந்தை, உற்பவம், உற்பத்தி. அ.
சூதகத்தின்பெயர்—ஆசௌசம். க.
நன்றணிமையின்பெயர்—புனிறு. க.
தோகைமாரதொடாப்பொருட்டின்பெயர்—காலாணை, பூப்பு. உ.

அதிசயமுறவிரங்கலின்பெயர்—அன்னோ, அந்தோ, ஆ, ஓ, அந்தோ, அச்சோ, ஐயோ, என்னே, எற்று, எவன். க0.
மனக்கோட்டத்தின்பெயர்—ஔவியம். க.
அழுக்காற்றின்பெயர்—நோனாமை, கூரம், பொறாமை. ரு.

துன்பத்தின்பெயர்—அல்லல், அலக்கண், மம்மர், அரந்தை, கோட்டாலை, பீழை, செல்லல், கேதம், கலக்கம், சிறுமை, சூர், உறுகண், புன்கண், இட்டளம், இன்னா, துனி, பருவரல், துக்கம், நோய், அழுங்கல், பிடை, உலமரல், அல்லகண்டம். உரு.

கவலை, யாதனை, பழங்கண், கையாறு, நடலை, பையுள், எவ்வம், ஏதம், வெறுப்பு, இடும்பை, இடுக்கண், இன்னல், படர், பனித்தல், வறுமை, வெய்துறல், பைதல், கவலை, விழுமம், கசு. (ஆ சுஉ.)

ஆசையின்பெயர்—மாதர், நச்சு, இச்சை, ஏடை, வயா, நம்பு, நசை, நயப்பு, காதல், வெப்பம், விருப்பம், காமம், இராகம், பற்று, ஆதரம், பெட்பு, வேட்கை, ஆர்வம், மேவல், வெஃகல், விழைவு. உக.

வேட்கைப்பெருக்கத்தின்பெயர்—மோகம், நம்பல், இரதி, வெஃகல், தாழ்தல், கவர்தல், பெட்டல், சார்பு, இவறல், வேண்டல், வீழ்தல், வேணவா. கஉ.
காமநோயின்பெயர்—விரகம், காமம், மதனம். ௩.

மாரியாமயமேபுண்கண்மடிநிழன்மடங்கல்பையுள்
சூர்பிணியுரோகங்குந்தஞ்சூழணங்கீராறுங்நோய்
பாரியவாதைபீதிவேதனைபண்ணுநோயாம்
ஓரும்யாதனைகொல்லாநோன்புழுருறுநரகநோயே. (௭௭)

அன்னவேயனையசேத்தேயாங்கொப்பப்புரையப்போல
இன்னவேபொருவவெள்ளவிகலவேகடுப்பமானச்
சொன்னகேழ்தகவுதூக்குத்துணையிணைநிகரநேர
மன்னும்வீழ்வுறழவற்றேமலைவெண்மூன்றுவமைப்பேரே. (௭௯)

மாலைநீர்தகவுபெற்றிமரபொடுகிழமைவண்மை
சால்பொடுதகுதிபான்மைதகைமையேயியல்புதன்மை
பால்விதிகொள்கைபண்புபடிமுறைபரிசிவவெல்லாம்
கோலமார்குணநாலைந்தாங்குணநிறமிரண்டும்பண்பாம். (௭௮)

கையொழியாமைகைதூவாமையாங்கையொழுக்கம்
கையறல்செயலறற்பேர்கையடையடைக்கலப்பேர்
மையிலாவுரிமையின்பேர்வருகெழுதகைமையோடு
பொய்யிலாக்கிழமைமற்றையுரித்தெனட்புகலலாமே. (௮௦)

தொடியொருபலமாங்கஃசுசொற்றகாற்பலமார்தூக்கு
நெடியகாத்துலாங்களென்பநிறைநூறுபலமேயாகும்
படியிலொன்றேகமென்பபத்தென்பதசமாநூறு
நொடிதரிற்சதமென்றாகுமாயிரநூற்றுப்பத்தே. (௮௧)

தேங்கியபுகழான்குன்றைக்குணபத்திரன்றிருத்தாள்போற்றி
வீங்குநீர்ப்பழனஞ்சூழ்ந்தவீரைமண்டலவன்செய்தான்
பாங்கினல்விளங்குபண்புபற்றியபெயரினீட்டம்
ஓங்கியகவிதையெண்ணிலொன்பதிற்றொன்பதொன்றே. (௮௨)

பண்புபற்றியபெயர்த்தொகுதி முற்றிற்று.

ஆ விருத்தம் - ௬௧௪.



நோயின்பெயர்—மாரி, ஆமயம், புன்கண், மடி, நிழல், மடங்கல், பையுள், சூர், பிணி, உரோகம், குந்தம், அணங்கு. கஉ.
வேதனைபண்ணுநோயின்பெயர்—வாதை, பீதி. உ.
நரகநோயின்பெயர்—யாதனை. க.

உவமையின்பெயர்—அன்ன, அனைய, சேத்து, ஆங்கு, ஒப்ப, புரைய, போல, இன்ன, பொருவ, எள்ள, இகல, கடுப்ப, மான, கேழ், தகவு, நூக்கு, துணை, இணை, நிகர, நேர, வீழ்வு, உறழ, அற்று, மலைவு. உரு.

குணத்தின்பெயர்—மாலை, நீர், தகவு, பெற்றி, மரபு, கிழமை, வண்மை, சால்பு, தகுதி, பான்மை, தகைமை, இயல்பு, தன்மை, பால், விதி, கொள்கை, பண்பு, படி, முறை, பரிசு. உ0.
பண்பின்பெயர்—குணம், நிறம். உ.

கையொழியாமையின்பெயர்—கைதூவாமை. க.
ஒழுக்கத்தின்பெயர்—கை. க. செயலறலின்பெயர்—கையறல். க.
அடைக்கலத்தின்பெயர்—கையடை. க.
உரிமையின்பெயர்—கெழுதகைமை, கிழமை, உரித்து. ங.

ஒருபலத்தின்பெயர்—தொடி. க. காற்பலத்தின்பெயர்—கஃசு. க.
தூக்கின்பெயர்—கா, துலாம். உ.
நூறுபலத்தின்பெயர்—நிறை. க. ஒன்றன்பெயர்—ஏகம். க.
பத்தின்பெயர்—தசம். க. நூற்றின்பெயர்—சதம். க.
ஆயிரத்தின்பெயர்—நூற்றுப்பத்து. க.



ஒன்பதாவது

# செயல்பற்றியபெயர்த்தொகுதி.



## காப்பு.

வியன்றிக்கவைரத்தால்வேர்வீழ்த்துப்பொற்கவடுகொண்டு
மயாநிக்கமரகதத்தால்வண்டழைபொதுளிப்பூந்தொத்
தியலுற்றபதுமராகபெதிர்பிண்டியிறைதாள்போற்றிச்
செயல்பற்றும்பெயர்க்கூட்டத்தைச்செப்புவமிப்பாற்கேண்மின. (௧)

செயல்விதிகருமங்கன்மஞ்செய்தொழில்வினையுமப்பேர்
அயர்தலேவனைதலாற்றல்குயிறலோடிழைத்தல்செய்தல்
நியமித்தல்விதித்தன்மற்றுநிருமித்தலொடுசெட்டித்தல்
பயனுறப்படைத்தலோடுபாரித்தல்பிறப்பித்தற்பேர். (௨)

தொடலையுண்டாட்டுப்பொய்தல்குழ்விலாசனையேவண்டல்
கெடவரல்பண்ணையுப்புக்கிரீடையேகேளியோரை
ப்டைமுலையாராடற்பேர்பொழுதுபோக்கேவினோதம்
படிபாராட்டுதெல்குலாவல்பரிந்துகொண்டாடன்மெச்சல். (௩)

வதுவைகைப்பற்றலேதிவலஞ்செய்தன்மணங்கல்யாணம்
விதிபுளிவேட்டன்மன்றல்விவாகமெண்பேர்விளங்கும்
புதுவிழாமுருகுசாறுபுத்தேளுற்சவமாஞ்சேறு
துதைமலர்கொண்டுபோற்றுந்துணங்கறலிரண்டுமெப்பேர். (௪)

புனைதல்கைசெய்தல்வேய்தல்பொற்புடனலங்கரித்தல்
வனைதலேயணிதல்பூசன்மண்ணலொப்பனையெண்பேராம்
வணமலர்மிலைதல்வேய்தனமலைதல்சூடுதலிம்முப்பேர்
சினைமலரடைச்சலோடுசெருகுதல்சொருகுதற்பேர். (௫)

அருந்திடறுய்த்தன்மாந்தலயிறலேயமுதுசெய்தல்
பொருந்தவேதாங்கைதொட்டல்புசித்தல்போசனமேயார்தல்
பரிந்தனர்நுகர்தறின்றல்பாரணமிசைதறுற்றல்
இருந்துணற்பேர்விழுங்கலிசைதருநொண்டனுங்கல். (௬)

# பெயர்ப்பிரிவு.



இ - ள். வியன் மிக்க வைரத்தால் வேர் வீழ்த்து - அதிசயம் மிகுந்த வச்சிரத்தினால் வேரோட்டி,—பொற்கவடு கொண்டு - பொன்னாலாகிய கொம்புகளைப் பொருந்தி,—மயம் மிக்க மரகதத்தால் வண் தழை பொதுளி - அழகு மிகுந்த மரகதத்தினால் அழகிய இலைகள் தழைக்கப்பெற்று,—இயல் உற்ற பதுமராகப் பூந்தொத்து எதிர் பிண்டி இறை தாள் போற்றி - குணம் பொருந்திய பதுமராகத்தாலாகிய மலர்த்திரள்கள் தோன்றப்பெறுகின்ற அசோகமரத்தினிழலின்கண் வீற்றிருந்த கடவுளுடைய பாதங்களைத் துதித்து,—இப்பால் செயல் பற்றும் பெயர்க்கூட்டத்தைச் செப்புவம - இனிச் செயல்பற்றிய பெயர்த்தொகுதியை (யாம்) கூறுவோம்,—கேண்மின் - கேளுங்கள். எ - று.

செய்தொழிலின்பெயர்—செயல், விதி, கருமம், கனமம், வினை. ௫.
செய்தலின்பெயர்—அயர்தல், வினைதல், ஆற்றல், குயிறல், இழைத்தல். ௫.
பிறப்பித்தலினபெயர்—நியமித்தல், விதித்தல், நிருமித்தல், சிட்டித்தல், படைத்தல், பாரித்தல். ௬.

மகளிர்விளையாட்டின்பெயர்—தொடலை, உண்டாட்டு, பொய்தல், விலாசனை, வண்டல், கெடவரல், பண்ணை, உப்பு, கிரீடை, கேளி, ஞெரை. ௧௧.
பொழுதுபோக்கலின்பெயர்—விநோதம். ௧.
மெச்சலின்பெயர்—பாராட்டுதல், குலாவல், கொண்டாடல். ௩.

விவாகத்தின்பெயர்—வதுவை, கைப்பற்றல், தீவலஞ்செய்தல், மணம், கல்யாணம, விதியுளி, வேட்டல், மன்றல். ௮.
உற்சவததினபெயர்—விழா, முருகு, சாறு, சேறு, துணங்கறல். ௫.

ஒப்பனையின்பெயர்—புனைதல், கைசெய்தல், வேய்தல், அலங்கரித்தல், வனைதல், அணிதல், பூசல், மண்ணல். ௮.
சூடுதலின்பெயர்—மிலைதல், வேய்தல், மலைதல். ௩.
சொருகுதலின்பெயர்—அடைச்சல், செருகுதல். ௨.

உண்ணலின்பெயர்—அருந்திடல், துய்த்தல், மாந்தல், அயிறல், அமுதுசெய்தல், கைதொட்டல், புசித்தல், போசனம், ஆர்தல், நுகர்தல், தின்றல், பாரணம், மிசைதல், துற்றல். ௧௪.
விழுங்கலின்பெயர்—நொண்டல், நுங்கல். ௨.

